30th January 1961]

SRI V. SUBBIAH : ஸார், கோவில்பட்டியில் சமுதாய நலத் திட்டத்தின்கீழ் ஆரம்பிக்கப்பட்ட கோழிப்பண்ணையில் நோய் வந்ததின் காரணமாக நஷ்டம் ஏற்பட்டு அந்த கோழிப்பண்ணையே மூடப்பட்டு விட்டது. இவ்விதம் நோய்வராமல் பாதுகாப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுத்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி அப் போதைக்கப்போது பரிசிலனை செய்யப்பட்டு நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது.

SRI A. VEDARATHNAM : தஞ்சை ஜில்லாவில் ஆலத்தம் பாடி என்ற இடத்தில் ஒரு கோழிப்பண்ணை ஆரம்பிக்க அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றி என் னிடம் தகவல் இல்லை.

*Compost manufacture (training)*

* 255 Q.—SRI M. P. SARATHI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கம்போஸ்ட் உரம் தயாரிப்பு பயிற்சி பெற எத்தனை அதிகாரிகள் வெளிராஜ்யங்களுக்கு, (ii) டெல்லிக்கு ; (iii) வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டனர் ?

(இ) எவ்வளவு காலப் பயிற்சி ?

(உ) பயிற்சிபெற அனுப்பப்பட்ட அதிகாரிகள் கெஜட் பதிவுள்ளவர்களா (Gazetted)? இல்லாதவர்களா (Non-Gazetted)?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a), (b) & (c) Four Gazetted Officers of the Agriculture Department were sent for training in compost manufacture at Delhi during 1957. The duration of the training was two weeks.

SRI M. P. SARATHI : இதற்கு மத்திய சர்க்காரிடமிருந்து ஏதாவது உதவி கிடைக்கின்றதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மத்திய சர்க்காரி லிருந்து உதவி கிடைக்கும்.

SRI V. K. KOTHANDARAMAN : இம்மாதிரியான கம்போஸ்ட் உரம் நல்ல முறையில் தயார் செய்வதற்காக நம் ராஜ்யத்தில் எத்தனை பஞ்சாயத்து போர்டுகள், எத்தனை நகரசபைகள் இவை களுக்கு வெகுமதி அளிக்கப்பட்டது என்பதை சொல்லமுடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்தத் தகவல் என்னிடமில்லை.